


# அனைவருக்கும் வணக்கம்

இங்கு பிரதம அதிதியாக வருகை தந்திருக்கும் பிரிவேனாப் பிரிவின் பணிப்பாளர் கௌரவ வணக்கத்திற்குரிய அஸ்ஸஜீ தேரர் அவர்களே, மதிப்பிற்குரிய பணிப்பாளர் அவர்களே, குருமார்களே, அன்புக்குரிய பிரிவேனாவின் ஆசிரியர்களே, அனைவருக்கும் காலை வணக்கம். எமது பிரிவேனாவின் அழைப்பினை ஏற்று இங்கு வருகை தந்த அனைவரையும் வருக வருக என நாங்கள் வரவேற்கின்றோம்.

எமது பிரிவேனாவில் இடம்பெறும் இலக்கியப் போட்டியில் பல பிரிவுகளின் கீழ் போட்டியாளர்கள் பங்குபற்றுகின்றார்கள். கையெழுத்துப் போட்டி, கட்டுரைப் போட்டி, சிறுகதைப் போட்டி போன்றன இதில் இடம்பெற உள்ளன.

மேலும் நான் கூறப் போகும் விடயம் தொடர்பாகவும் தயவு செய்து கவனிக்கவும். எங்கள் பிரிவேனாவின் சிற்றுண்டிச்சாலையில் உங்களுக்குத் தேவையான உணவுகளை நீங்கள் பணம் செலுத்திப் பெற்றுக்கொள்ள முடியும்.

பொலித்தின் மற்றும் கழிவுப் பொருட்களை உரிய இடங்களில் போடவும். மேலும் சுற்றாடலைச் சுத்தமாக வைத்திருத்தல் தொடர்பாகவும் கவனம் செலுத்த வேண்டும் என்றும் தயவுடன் கேட்டுக்கொள்கின்றேன்.

நன்றி

வணக்கம்

**சொல் அறிமுகம்**
වදන් පෙළ

| | | |
|---|---|---|
| அதிதி | - | ආරාධිත අමුත්තා |
| பணிப்பாளர் | - | අධ්‍යක්ෂ |
| அழைப்பு | - | ඇරයුම |
| வரவேற்புரை | - | පිළිගැනීමේ කථාව |
| பிரிவுகள் | - | අංශ |
| போட்டி | - | තරගය |
| கையெழுத்து | - | අත් අකුරු |
| கட்டுரை | - | රචනාව |
| சிறுகதை | - | කෙටි කථාව |

**செயற்பாடு 1**
ක්‍රියාකාරකම 1

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுங்கள்.**
පහත සඳහන් ප්‍රශ්නවලට පිළිතුරු ලියන්න.

01. விழாவின் பிரதம அதிதி யார்? ____________________

02. இந்நிகழ்விற்கு வருகைதந்த ஏனையோரைக் குறிப்பிடுங்கள்?

____________________

03. இந்நிகழ்வில் நடைபெறுகின்ற போட்டிகள் எவை?

____________________

04. தேவையான உணவுகளை எங்கே பெற்றுக்கொள்ள முடியும்?

____________________

05. குப்பைகளை எங்கு போட வேண்டும்?

____________________

## செயற்பாடு 2
## ක්‍රියාකාරකම 2

**பின்வரும் எழுவாய்களுக்குப் பொருத்தமான பயனிலைகளைத் தெரிவுசெய்து இணையுங்கள்.**
පහත සඳහන් උක්ත පදයට ගැළපෙන ආඛ්‍යාත පදය සොයා යා කරන්න.

| | | |
|---|---|---|
| 01. | நான் | நடக்கின்றீர்கள் |
| 02. | நாம் | நடக்கின்றேன் |
| 03. | நாங்கள் | நடக்கின்றாய் |
| 04. | நீ | நடக்கின்றோம் |
| 05. | நீங்கள் | நடக்கின்றோம் |

## செயற்பாடு 3
## ක්‍රියාකාරකම 3

**உதாரணத்தை அவதானித்து இடைவெளிகளை நிரப்புங்கள்.**
උදාහරණයේ දක්වා ඇති ආකාරයට හිස්තැන් පුරවන්න.

உ-தா. - நான் ஓடுகின்றேன்.

நாம் ____________________

நாங்கள் ____________________

நீ ____________________

நீங்கள் ____________________

## செயற்பாடு 4
## ක්‍රියාකාරකම 4

**பொருத்தமான பெயர்ச் சொற்களை இட்டு இடைவெளிகளை நிரப்புங்கள்.**
ගැළපෙන නාම පදය යොදා හිස්තැන් සම්පූර්ණ කරන්න.

01. ______________________ தேடுகின்றீர்கள்.

02. ______________________ அடிக்கின்றேன்.

03. ______________________ விளையாடுகின்றோம்.

04. ______________________ சாப்பிடுகின்றாய்.

05. ______________________ பாடுகின்றோம்.

## செயற்பாடு 5
## ක්‍රියාකාරකම 5

**உங்கள் வகுப்பறைக்குப் பொருத்தமான அறிவித்தல்கள் இரண்டினைப் பாடத்தில் இருந்து தெரிந்தெடுத்து எழுதுங்கள்.**
පාඩම ඇසුරෙන් ඔබගේ පන්ති කාමරයට ගැළපෙන නිවේදන දෙකක් ලියන්න.

01.

02.

**செயற்பாடு 6**
ක්‍රියාකාරකම 6

**பின்வரும் அழைப்பிதழை அவதானித்து, அதில் உள்ள விடயங்களைக் கருத்திற் கொண்டு அழைப்பிதழ் ஒன்றினைத் தயாரியுங்கள்.**
පහත සඳහන් ආරාධනා පත්‍රය අවධානයට ගෙන ඒ සමග ඉදිරිපත් කරන ලද තොරතුරු උපයෝගි කරගෙන ඇරයුම් පතක් සකස් කරන්න.

**இலக்கியப் போட்டி 2017**

ஸ்ரீ குணரதன பிரிவேனா

திகதி - 2017 - 06 - 15
நேரம் - மு.ப. 9.00 மணிக்கு
இடம் - ஸ்ரீ குணரதன பிரிவேனாவின் பிரதான மண்டபம்
பிரதம அதிதி - பிரிவேனாப் பிரிவின் பணிப்பாளர் தேரர்

அனைவரையும் அன்புடன் அழைக்கின்றோம்.

இங்ஙனம்,
இலக்கிய விழா ஏற்பாட்டுக் குழு.

*பரிசளிப்பு விழா*

*2017 . 08. 15*

*பிரிவேனாவின் பிரதான மண்டபம்*

*கல்வி அமைச்சர் (பிரதம அதிதி)*

*நேரம் - பி. ப. 2. 00 மணிக்கு*

# 02 பிறந்தநாள் விழா

| | | |
|---|---|---|
| அமிதா | - | வணக்கம் மாமி இனிய பிறந்தநாள் வாழ்த்துக்கள். |
| மாமி | - | நன்றி மகளே, |
| அமிதா | - | இதோ உங்களுக்கு ஒரு சின்னப் பரிசு. |
| மாமி | - | மிக்க நன்றி. |
| அமிதா | - | மாமி, விஜியும் வெள்ளைப் பாட்டியும் சின்னத் தம்பியும் எங்க? |
| மாமி | - | அந்த அறையில பாருங்க அமிதா. |
| அமிதா | - | ஓம்..மாமி நான் பாக்கிறன். |
| விஜி | - | ஹாய்... அமிதா நீண்ட நாட்களுக்குப் பிறகு. வெள்ளைப் பாட்டி... இங்க வாங்க. யார் வந்திருக்கிறாங்க எண்டு பாருங்க. |
| பாட்டி | - | கொஞ்சம் இருங்க விஜி வாறன். ஓ... அமிதாவா? எப்படி சுகம்? வாங்க.. வாங்க.. உங்களுக்கு கடவுள் துணை. |
| மாமி | - | விஜி, தம்பி எங்க? |
| விஜி | - | தெரியாது அம்மா. |
| மாமி | - | போய் பாருங்க விஜி. |
| விஜி | - | ம்.. அம்மா அமிதா வந்திருக்கிறாங்க. |
| பாட்டி | - | லட்டு, அரியதரம், வடை இருக்கு. சாப்பிடுங்க அமிதா. |
| அமிதா | - | கொஞ்ச நேரம் போகட்டும். மாமி கேக் செய்ய இல்லையா? |
| மாமி | - | செஞ்சன். அதை பின்நேரம் சாப்பிடுவம். |
| அமிதா | - | சரி.. சரி.. நான் சும்மா தான் கேட்டன். |
| மாமி | - | பரவாயில்லை கை கால் கழுவிட்டு வாங்க. விஜி அமிதாவை கூட்டிக்கொண்டு போங்க. |
| விஜி | - | சரி.. அம்மா நான் கூட்டிக் கொண்டு போறன். |

**சொல் அறிமுகம்**

වදන් පෙළ

| | | |
|---|---|---|
| பிறந்தநாள் | - | උපන්දිනය |
| பரிசு | - | තෑග්ග |
| அறை | - | කාමරය |
| கடவுள் | - | දෙවියන් |
| துணை | - | පිහිටයි |
| அப்ப | - | එහෙනම් |
| மிக்க நன்றி | - | බොහොම ස්තුතියි |
| கொஞ்சம் | - | ටිකක් |
| சுகம் | - | සැප සනීප |



**செயற்பாடு 1**
ක්‍රියාකාරකම 1

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுங்கள்.**
පහත සඳහන් ප්‍රශ්නවලට පිළිතුරු ලියන්න.

01. இது யாருடைய பிறந்தநாள்? ____________________

02. பரிசு கொண்டு வந்தவர் யார்? ____________________

03. வெள்ளைப் பாட்டியைக் கூப்பிட்டவர் யார்? ____________________

04. தம்பியைப் பற்றிக் கேட்டவர் யார்? ____________________

05. அங்கே இருந்த உணவு வகைகள் எவை? ____________________

## செயற்பாடு 2
## ක්‍රියාකාරකම 2

**பின்வரும் பேச்சு வழக்கிற்குப் பொருத்தமான எழுத்து வழக்குச் சொல்லைத் தெரிவு செய்து இணையுங்கள்.**
පහත සඳහන් භාෂණ වචනයට අනුරූප ලේඛන වචනය සොයා යා කරන්න.

| | பேச்சு வழக்கு | எழுத்து வழக்கு |
|---|---|---|
| 01. | எங்க | பாருங்கள் |
| 02. | அறையில | செய்தேன் |
| 03. | பாருங்க | இங்கே |
| 04. | பாக்கிறன் | வருகின்றார்கள் |
| 05. | இங்க | எங்கே |
| 06. | எண்டு | என்று |
| 07. | வாறாங்க | அறையில் |
| 08. | செஞ்சன் | பார்க்கின்றேன் |

## செயற்பாடு 3
## ක්‍රියාකාරකම 3

**பொருத்தமான பெயர்ச் சொல்லை உரையாடலில் இருந்து தெரிவுசெய்து இடைவெளிகளில் எழுதுங்கள்.**
ගැළපෙන නාම පදය දෙබසින් සොයා හිස්තැන මත ලියන්න.

01. ______________________ பாக்கிறன்.

02. ______________________ வந்து இருக்கிறாங்க.

03. ______________________ இருங்க.

04. ______________________ பாருங்க.

05. நீங்கள் ______________________ சாப்பிடுங்கள்.

## செயற்பாடு 4
## ක්‍රියාකාරකම 4

**பின்வரும் பேச்சுத் தமிழ் வாக்கியங்களை எழுத்து வழக்கிற்கு மாற்றி எழுதுங்கள்.**

පහත සඳහන් කථන බසෙන් ඇති වාක්‍ය ලේඛන බසට හරවා ලියන්න.

01. அம்மா இங்க பாருங்க. - ______________________

02. வடை சாப்பிடுங்க. - ______________________

03. நான் பாக்கிறன். - ______________________

04. பாட்டி எங்க? - ______________________

05. அந்த அறையில பாருங்க - ______________________

## செயற்பாடு 5
## ක්‍රියාකාරකම 5

**இடைவெளி நிரப்புங்கள்.**

හිස්තැන් පුරවන්න.

| | | |
|---|---|---|
| இது | அம்மாவின் | ______ |
| | மாமியின் | ______ |
| | விஜியின் | ______ |
| அது | அமிதாவின் | ______ |
| | பாட்டியின் | ______ |

**செயற்பாடு 6**
ක්‍රියාකාරකම 6

**கட்டத்துக்குள் தரப்பட்டிருக்கும் சொல்லைத் தெரிவு செய்து இடைவெளி நிரப்புங்கள்.**
කොටුව තුළ ඇති වචනය යොදා හිස්තැන් පුරවන්න.

| | |
|---|---|
| வெள்ளை | இனிய |
| சுவையான | சின்ன |

01. ________________ பாட்டி.
02. ________________ தம்பி.
03. ________________ பிறந்தநாள் வாழ்த்துக்கள்.
04. ________________ லட்டு.
05. ________________ அரியதரம்.

# 03 அம்மாவும் நீயே அப்பாவும் நீயே

அம்மாவும் நீயே அப்பாவும் நீயே
அன்புடனே ஆதரிக்கும் தெய்வமும் நீயே

அம்மாவும் நீயே..................

தந்தை முகம் தாயின் முகம் கண்டறியோமே
மன சாந்தி தரும் இனிய சொல்லை கேட்டறியோமே
எங்களுக்கோ அன்பு செய்ய யாரும் இல்லையே
இதை அறியாயோ முருகா உன் கருணை இல்லையோ
முருகா.... முருகா..... முருகா.....

அம்மாவும் நீயே..........

பூனை நாயும் கிளியும் கூட மனிதர் மடியிலே
பெற்ற பிள்ளை போலே நல்லுறவாய் கூடி வாழுதே
ஈ எறும்பும் உன் படைப்பில் இனிமை காணுதே
இதை அறியாயோ முருகா உன் கருணை இல்லையோ
முருகா..... முருகா...... முருகா......

அம்மாவும் நீயே........

(களத்தூர் கண்ணம்மா திரைப்படப் பாடல்)

## சொல் அறிமுகம்
## වදන් පෙළ

| | | |
|---|---|---|
| அன்புடனே | - | ආදරයෙන් |
| ஆதரிக்கும் | - | සෙනෙහස දක්වන |
| தெய்வம் | - | දෙවියන් |
| மனம் | - | සිත |
| கருணை | - | කරුණාව |
| பெற்ற பிள்ளை | - | වැදූ දරුවා |
| நல்லுறவு | - | දැඩිබැඳීම |
| எறும்பு | - | කූඹියා |
| வாழ் | - | ජීවත්වෙන්න |
| ஈ | - | මැස්සා |



## செயற்பாடு 1
## ක්‍රියාකාරකම 1

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுங்கள்.**

පහත සඳහන් ප්‍රශ්නවලට පිළිතුරු ලියන්න.

01. இப்பாடலில் கூறப்பட்டுள்ள உறவினர்களின் பெயர்களைத் தருக.

____________________

02. இப்பாடலைப் பாடுபவர் யாரின் முகம் காணவில்லையை என்று கூறுகிறார்?

____________________

03. இப்பாடலில் இடம்பெறும் வீட்டில் வளர்க்கும் மிருகங்களின் பெயர்களைக் குறிப்பிடுங்கள். ____________________

04. இந்தப் பாடலில் இடம்பெறும் இரண்டு சிறிய பிராணிகளின் பெயர்களைக் குறிப்பிடுங்கள். ____________________

05. முருகனிடம் எதிர்பார்ப்பவை எவை? ____________________

## செயற்பாடு 2
## ක්‍රියාකාරකම 2

**பின்வரும் சொற்களுக்குப் பொருத்தமான எதிர்க் கருத்துச் சொல்லை வட்டத்திலிருந்து தெரிவு செய்து எழுதுங்கள்.**

පහත සඳහන් වචන වලට ගැළපෙන විරුද්ධ අර්ථය ඇති වචනය රවුමෙන් තෝරා ලියන්න.

01. அம்மா - ______________________

02. தாய் - ______________________

03. இன்பம் - ______________________

04. மேல் - ______________________

05. உள்ளே - ______________________

கீழ்

வெளியே

தந்தை

அப்பா

துன்பம்

## செயற்பாடு 3
## ක්‍රියාකාරකම 3

**பின்வரும் சொற்களுக்குப் பொருத்தமான ஒத்த கருத்துச் சொல்லை வட்டத்திலிருந்து தெரிவு செய்து எழுதுங்கள்.**

පහත සඳහන් වචන වලට ගැළපෙන සමාන අර්ථය ඇති වචනය රවුමෙන් තෝරා ලියන්න.

01. அம்மா - ______________________

02. அப்பா - ______________________

03. மனம் - ______________________

04. தெய்வம் - ______________________

05. அன்பு - ____________________

06. அறிவு - ____________________

07. கருணை - ____________________

08. பாட்டு - ____________________

09. உறவு - ____________________

10. போல - ____________________

தாய்
மாதிரி
இரக்கம்
கடவுள்
பாடல்
தந்தை
பாசம்
புத்தி
உள்ளம்
சொந்தம்

## செயற்பாடு 4
## ක්‍රියාකාරකම 4

**பின்வரும் படத்தைப் பார்த்து ஐந்து வாக்கியங்கள் எழுதுங்கள்.**

පහත සඳහන් පින්තූරය ඇසුරෙන් වාක්‍ය පහක් ලියන්න.



01. ________________________________________

02. ________________________________________

03. ________________________________________

04. ________________________________________

05. ________________________________________

## செயற்பாடு 5
## ක්‍රියාකාරකම 5

**பாடலில் உள்ள பெயர்ச் சொற்களை உயர்திணை, அஃறிணை என வேறுபடுத்தி கீழே உள்ள அட்டவணையில் எழுதுங்கள்.**

ගීතයේ කියවෙන නාම පද මානව වාචී හා අමානව වාචී ලෙස වෙන්කර පහත ඇති වගුවේ ලියන්න.

| உயர்திணை | அஃறிணை |
|---|---|
| | |
| | |
| | |
| | |
| | |
| | |
| | |
| | |
| | |
| | |

## செயற்பாடு 6
## ක්‍රියාකාරකම 6

**கேமானந்த தேரர் பற்றிய தகவல்களை வாசித்து கீழே உள்ள விண்ணப்பப் படிவத்தைப் பூர்த்தி செய்யுங்கள்.**
ඛේමානන්ද හිමියන්ගේ තොරතුරු කියවා පහත ඇති අයදුම් පත්‍රය සම්පූර්ණ කරන්න.

*கேமானந்த ஒரு பௌத்த பிக்கு. அவருடைய பிரிவேனா ஜினரதன மஹா பிரிவேனா ஆகும். அவர் நான்காம் தரத்தில் படிக்கின்றார். அவருடைய வகுப்பாசிரியர் வணக்கத்திற்குரிய அஸ்ஸஜி தேரர் ஆவார். கேமானந்த தேரர் 2003 ஆம் ஆண்டு மாசி மாதம் ஐந்தாம் திகதி பிறந்தார். அவருடைய நாயக்க தேரரின் பெயர் வணக்கத்துக் குரிய விபஸ்ஸி. இவர்கள் கம்பஹா, கல்யாணி வீதி, சுமேதாராம விஹாரையில் இருக்கின்றார்கள். இவர்களை 0781384428 எனும் தொலைபேசி இலக்கத்தின் ஊடாகத் தொடர்பு கொள்ளலாம்.*

நூலக அங்கத்தவர் விண்ணப்பப் படிவம்

01. பெயர் :- ______________________
02. முகவரி :- ______________________
03. பிரிவேனா :- ______________________
04. தரம் :- ______________________
05. பிறந்த திகதி :- வருடம் ....... மாதம்.... திகதி ........
06. பால் :- ஆண் ☐ பெண் ☐
(உரிய கூட்டினுள் × அடையாளம் இடுக.)
07. வகுப்பாசிரியரின் பெயர்:- ______________________
08. நாயக்க தேரரின் தொலைபேசி இலக்கம் :- ________________

.........................................
திகதி .................... விண்ணப்பதாரியின் ஒப்பம்

# 04 பௌர்ணமி தினம்



பௌர்ணமி தினம் பௌத்தர்களின் முக்கியமான ஒரு நாள். அன்று பௌத்தர்கள் எல்லோரும் அதிகாலையில் நான்கு மணிக்கு எழுந்து வெள்ளை ஆடை அணிந்து ஆறு மணிக்கு முன்னர் பன்சலைக்குப் போவார்கள்.



ஆறு முப்பதுக்குச் சீலம் நோற்பார்கள். ஆறு நாற்பதுக்கு புத்த பெருமானை நமஸ்காரம் செய்து வழிபடுவார்கள்.

பின்னர், ஏழு மணிக்கு மார்க்கப் போதனைகளை செவிமடுப்பார்கள். ஏழு நாற்பதுக்கு உறவினர் அவர்களுக்கு உபகாரம் செய்வார்கள்.



ஒன்பது மணிக்கு பெற்றோர்களுக்கு மரியாதை செய்வார்கள். பின்னர் தீபங்கள் ஏற்றுவார்கள்; மலர்கள் வைத்துப் பூஜிப்பார்கள்; வாசனைத் திரவியங்கள் பூஜிப்பார்கள்.

ஒன்பது மணிக்கும் பத்து மணிக்கும் இடையில் மார்க்கத்தின் நடைமுறைகளை வாசித்தும் கேட்டும் அறிந்து கொள்வார்கள். அதன்படி நடக்க முயற்சி செய்வார்கள்.



பதினொரு மணிக்கு சமய வழிபாடுகளில் ஈடுபடுவோருக்கும் மதகுருமார்களுக்கும் அன்னதானம் வழங்கி கௌரவித்துத் தாமும் புண்ணிய காரியங்களில் பங்கு கொள்வார்கள்.

**சொல் அறிமுகம்**
වදන් පෙළ

| | | |
|---|---|---|
| பௌத்தர்கள் | - | බෞද්ධයෝ |
| முக்கியமான | - | වැදගත් |
| அதிகாலை | - | උදේ |
| சீலம் | - | සිල් |
| போதனை | - | දේශනය |
| தீபம் | - | පහන |
| வாசனை | - | සුවඳ |
| பெற்றோர்கள் | - | දෙමව්පියෝ |
| அன்னதானம் | - | දානය |
| புண்ணியம் | - | පින |

**செயற்பாடு 1**
ක්‍රියාකාරකම 1

**ஆசிரியரின் உதவியுடன் உரையாடலை வாசியுங்கள்.**
ගුරුවරයාගේ උදව් ඇතිව දෙබස කියවන්න.



தலைமைத் தேரர் :- வாங்க குமாரன், வாங்க விகாரைக்குப் போவோம்.

குமாரன் :- சரி போவோம்,

குமாரன் :- மலர் கொண்டு போவோம்.

தலைமைத் தேரர் :- அதோ, புத்த பெருமானின் சிலை.

குமாரன் :- ஆ, அதோ, இருக்கு.

தலைமைத் தேரர் :- நாம் இருவரும் மலர்கள் பூஜிப்போம். புத்த பெருமானை வணங்குவோம்.



### செயற்பாடு 2
### ක්‍රියාකාරකම 2

கட்டத்துக்குள் இருக்கும் சொல்லைத் தெரிவுசெய்து இடைவெளி நிரப்புங்கள்.
කොටුව තුළ ඇති වචනය තෝරා හිස්තැන් පුරවන්න.

| மரம், பெரிய, ஆசனம், வசிக்கும், சாலை, சிலை, விளக்கு |
|---|

01. போதி ________

02. தர்ம ________

03. மலர் ________

04. புத்தர் ________

05. குத்து ________

06. ________சைத்தியம்

07. துறவிகள் ________ இடம்



## செயற்பாடு 3
## ක්‍රියාකාරකම 3

பின்வரும்படங்களைப்பார்த்து அவற்றின் பெயர்களைக் கிறிட்ட இடங்களின்மீது எழுதுங்கள்.

පහත සඳහන් පින්තූර බලා ඒවායේ නම හිස්තැන මත ලියන්න.



______________________



______________________



______________________



______________________

**செயற்பாடு 4**
ක්‍රියාකාරකම 4

உதாரணத்தை அவதானித்து இடைவெளி நிரப்புங்கள்.
උදාහරණයට අවධානය යොමු කර හිස්තැන් පුරවන්න.

| | | | | |
|---|---|---|---|---|
| அம்மா | + | மார் | = | அம்மாமார் |

01. அப்பா = ______
மாமா = ______
அக்கா = ______

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| நா~~ள்~~ | + | ட் | + | கள் | = | நாட்கள் |

02. வாள் = ______
பொருள் = ______
முள் = ______

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| சொ~~ல்~~ | + | ற் | + | கள் | = | சொற்கள் |

03. பல் = ______
வில் = ______
புல் = ______

| | | | | |
|---|---|---|---|---|
| புறா | + | க்கள் | = | புறாக்கள் |

04. கோசு = ____________
விழா = ____________
தெரு = ____________

| | | | | |
|---|---|---|---|---|
| பூ | + | க்கள் | = | பூக்கள் |

05. மா = ____________
ஈ = ____________
மை = ____________

| | | | | |
|---|---|---|---|---|
| பழம் | + | ங்கள் | = | பழங்கள் |

06. பாடம் = ____________
படம் = ____________
மரம் = ____________

| | | | | |
|---|---|---|---|---|
| பறவை | + | கள் | = | பறவைகள் |

07. யானை = ____________
குதிரை = ____________
மேசை = ____________

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| மனிதன் | + | ர் | + | கள் | = | மனிதர்கள் |

08. அரசன் = ____________
சேவகன் = ____________
பணக்காரன் = ____________

## செயற்பாடு 5
## ක්‍රියාකාරකම 5

பின்வரும் படங்களை அவற்றுக்குப் பொருத்தமான சொற்களோடு இணையுங்கள்.

**පහත සඳහන් පින්තූරවලට ගැලපෙන වචන හඳුනාගෙන යා කරන්න.**



போதி மரம்

புத்தர் சிலை





தர்ம சாலை

மலர் ஆசனம்





பிங்கான்

இளநீர்





குடை

தாம்பூலம்





பழங்கள்

படிக்கம்



**செயற்பாடு 6**
**ක්‍රියාකාරකම 6**

01. பாடத்தை வாசித்து இடைவெளிகளை நிரப்புங்கள்.
පාඩම කියවා හිස්තැන් පුරවන්න.

i. அன்று எல்லோரும் அதிகாலையில் ______________ எழுவார்கள்.

ii. அவர்கள் ______________ முன் பன்சலைக்குப் போவார்கள்.

iii. அவர்கள் ______________ சீலம் நோற்பார்கள்.

iv. அவர்கள் ______________ புத்த பெருமானை நமஸ்காரம் செய்வார்கள்.

v. பின்னர் ______________ சமயப் போதனைகளை செவிமடுப்பார்கள்.

02. கீழே குறிப்பிடப்பட்டுள்ள நேரங்களை தமிழில் எழுதுங்கள்.
පහත සඳහන් වේලාවල් දෙමළෙන් ලියන්න.




_ _ _ _ _ _ _




_ _ _ _ _ _ _

# 05 திருடனும் நாயும்

ஒரு கிராமத்தில் குமரன் என்ற விவசாயி வாழ்ந்து வந்தார். தனது சொந்த முயற்சியால் உழைத்து முன்னேறிய அவர், மனிதாபிமானம் உள்ளவராகவும் வாழ்ந்து வந்தார். அவர் தனக்குப் பிரியமுள்ள செல்லப்பிராணியாக ஒரு நாயை வளர்த்து வந்தார். நாயும் அவருக்கு விசுவாசமாக நடந்து கொண்டது.

ஒரு நாள், வீட்டில் யாரும் இல்லாத நேரத்தில் ஒரு திருடன் திருடுவதற்காக அங்கு வந்தான். திருடனைக் கண்ட நாய் குரைத்தது. அது அவனை உள்ளே செல்ல விடவில்லை. அப்போது அத்திருடன் ஓர் இறைச்சித் துண்டை நாயை நோக்கி நீட்டினான். நாய் அவனைக் கோபத்துடன் பார்த்தது. நான் எனது எஜமானுக்கு ஒரு போதும் துரோகம் செய்யமாட்டேன். காரணம் எனது எஜமான் என் மீது வைத்திருக்கும் நம்பிக்கையை நான் இழக்கத்தயாராக இல்லை. இப்போது நீ தரும் இந்த இறைச்சியை உண்டு விட்டு, உனக்கு உதவி செய்தால் உன் ஆசைகள் நிறைவேறிவிடும். நான் ஒரு நாயாக இருந்தாலும் எனது எஜமானுக்கு நன்றியுள்ளவனாக என்றும் வாழ ஆசைப்படுகின்றேன். உன்னுடைய இறைச்சித்துண்டை நீயே சாப்பிடு என்றது நாய். நாய் சொன்னதைக் கேட்ட திருடன் வெட்கித் தலைகுனிந்தவனாக அவ்விடத்தை விட்டுச் சென்றான்.

## சொல் அறிமுகம்
## වදන් පෙළ

| | | |
|---|---|---|
| கிராமத்தில் | - | ගමේ |
| மனிதாபிமானம் | - | මානුෂික |
| செல்லப்பிராணி | - | සුරතලා |
| திருடுவதற்காக | - | සොරකම් කිරීම සඳහා |
| இறைச்சித் துண்டு | - | මස් කෑල්ල |
| துரோகம் | - | ද්‍රෝහිකම |
| நம்பிக்கை | - | විශ්වාසය |
| எஜமானுக்கு | - | ස්වාමියාට |
| வெட்கி | - | ලැජ්ජාවෙන් |
| தலைகுனிந்து | - | හිස පහත්කරලා |



### செயற்பாடு 1
### ක්‍රියාකාරකම 1

பாடத்தை வாசித்துப் பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுங்கள்.
පාඩම කියවා පහත සඳහන් ප්‍රශ්නවලට පිළිතුරු ලියන්න.

01. இந்தப் பாடத்தில் இடம்பெறும் விவசாயியின் பெயர் என்ன?

02. அவரிடம் காணப்பட்ட நற்பண்புகள் எவை?

03. திருடன் வீட்டிற்குச் சென்றபோது வீட்டில் யார் இருந்தார்கள்?

04. திருடன் ஏன் இறைச்சித்துண்டை நாயிடம் நீட்டினான்?

05. இறைச்சித்துண்டை நீட்டியதைக் கண்ட நாய் என்ன செய்தது?

06. நாயின் வார்த்தைகளைக் கேட்ட திருடன் என்ன செய்தான்?

07. இக்கதையிலிருந்து நீங்கள் கற்றுக்கொண்ட முக்கிய விடயம் யாது?

## செயற்பாடு 2
## ක්‍රියාකාරකම 2

இக்கதையிலிருந்து பொருத்தமான சொற்களைத் தெரிந்து இடைவெளிகளை நிரப்புங்கள்.
පාඩමෙන් සුදුසු වචනය තෝරා හිස්තැන් සම්පූර්ණ කරන්න.

01. தனது ______________ முயற்சியால் உழைத்து முன்னேறினார்.
02. அவர் ______________ உள்ளவராகவும் வாழ்ந்து வந்தார்.
03. நாய், அவருக்கு ______________ நடந்து கொண்டது.
04. நான் எனது எஜமானுக்கு ______________ துரோகம் செய்யமாட்டேன்.
05. திருடன் வெட்கித் ______________ சென்றான்.

## செயற்பாடு 3
## ක්‍රියාකාරකම 3

பின்வரும் சொற்களுக்குப் பன்மைச் சொற்களை எழுதுங்கள்.
පහත සඳහන් වචන බහු වචනයට හරවා ලියන්න.

01. விவசாயி - ______________
02. உதவி - ______________
03. திருடன் - ______________
04. நாய் - ______________
05. இறைச்சித்துண்டு - ______________
06. ஆசை - ______________
07. செல்லப்பிராணி - ______________



## செயற்பாடு 4
## ක්‍රියාකාරකම 4

பின்வரும் இறந்தகால வினைச் சொற்களை எதிர்காலத்திற்கு மாற்றுங்கள்.
පහත සඳහන් අතීත කාල ක්‍රියාපද අනාගත කාල ක්‍රියාපද ලෙස සකස්කර ලියන්න.

உதாரணம்

உழைத்தார் - உழைப்பார்

01. முன்னேறினார் - ______________

02. வந்தார் - ______________

03. வந்தான் - ______________

04. நீட்டினான் - ______________

05. சென்றான் - ______________



## செயற்பாடு 5
## ක්‍රියාකාරකම 5

பின்வரும் சொற்களைக் கொண்டு வாக்கியம் அமையுங்கள்.
පහත සඳහන් පද යොදාගෙන වාක්‍ය ලියන්න.

01. கிராமம் - ______________________

02. விவசாயி - ______________________

03. திருடன் - ______________________

04. எஜமான் - ______________________

05. வீடு - ______________________



## செயற்பாடு 6
## ක්‍රියාකාරකම 6

பின்வரும் வாக்கியங்களைச் சிங்கள மொழிக்கு மொழி பெயருங்கள்.
පහත සඳහන් වාක්‍ය සිංහල භාෂාවට පරිවර්තනය කරන්න.

01. நாய் திருடனைப் பார்த்தது.

______________________

02. விவசாயி ஒரு நாயை வளர்த்தார்.

______________________

03. குமரன் முயற்சி உடையவர்.

______________________

04. திருடன் இறைச்சித்துண்டை எடுத்துச் சென்றான்.

______________________

05. நாய் இறைச்சித் துண்டுக்கு ஆசைப்படவில்லை.

______________________

# 06 அன்றும் இன்றும்



முன்னொரு காலத்தில் வாரணாசி என்ற நகரை பிரம்மதத்த என்ற ஓர் அரசன் ஆண்டு வந்தான். அவனது மகன் பிரம்மதத்த. அரசன் தனது மகன் பிரம்மதத்த இளவரசனை தக்சலா திசாபாமொக் ஆசானிடம் கல்வி கற்க அனுப்பி வைத்தார்.



இளவரசன் ஆசானைச் சந்தித்தான். தான் வந்த காரணத்தைக் கூறி நமஸ்காரம் செய்தான்.



ஒரு நாள் வழக்கம் போல ஆசான் நீராடப் போகும்போது இளவரசனையும் அவருடன் கூட்டிச் சென்றார்.



போகும் வழியில் மூதாட்டி ஒருவரின் எள்ளுப் பாயை கண்ட இளவரசன், அதில் ஒரு பிடியை எடுத்து வாயில் போட்டுக் கொண்டான்.



தொடர்ந்து இரண்டாம், மூன்றாம் நாளும் அப்படியே செய்தான்.

இதைக் கண்ட மூதாட்டி கோபத்துடன் ஆசானைத் திட்டினாள். இது தொடர்பாக மூதாட்டியிடம் ஆசான் விசாரித்தார். மூதாட்டி நடந்தவற்றைக் கூற, ஆசான் அதற்குப் பணம் தருவதாகக் கூறினார்.

அதற்கு மூதாட்டி, 'பணம் தேவையில்லை. இனி இப்படி நடக்காமல் பார்த்துக் கொள்ளுங்கள்' என்றாள்.



இதைக் கேட்ட ஆசான் இளவரசனை மூங்கில் பிரம்பால் தண்டித்தார். இத் தண்டனையால் கோபம் கொண்ட இளவரசன் ஆசான் மீது பகைமை கொண்டான்.



சிறிது காலத்திற்குப் பின்னர் முழுமை பெற்ற கல்வியோடு இளவரசன் தன் நாட்டிற்குச் சென்று அரச பதவியை ஏற்றுக் கொண்டான். பதவி ஏற்ற அரசன் தன் ஆசானை பழிவாங்கும் நோக்கத்தோடு அரச மாளிகைக்கு வருமாறு அவரை அழைத்தார்.

அரசனின் நோக்கத்தை அறிந்த ஆசான், கால தாமதம் செய்து, பல வருடங்களுக்கு பின்னர், முதுமைத் தோற்றத்துடன் அரசனைச் சந்திக்கச் சென்றார்.



ஆசானைக் கண்ட அரசன் தனக்கு அவர் வழங்கிய தண்டனைக்காக அவரைத் தண்டிக்குமாறு அரச சபைக்கு ஆணையிட்டார்.

இதைக் கேட்ட ஆசான் 'அன்றைய தவறுக்கு தான் தண்டிக்காது விட்டிருந்தால் இன்று தங்களுக்கு இந்த அரச பதவி கிடைத்திருக்காது, என்றார்.



இதைக் கேட்ட அரச சபை மந்திரிமார் ஆசானின் பதிலை ஏற்று அரசனுக்கு அறிவுரை கூறினார்கள். அரசனும் அதனை ஏற்றுக்கொண்டு ஆசானுக்கு பிரதி உபகாரம் செய்யுமாரு மந்திரிமார்களிடம் கேட்டுக் கொண்டார்.

*(திலமுட்டி ஜாதகக் கதை)*

**சொல் அறிமுகம்**

වදන් පෙළ

| | | |
|---|---|---|
| முன்னொரு | - | එක් කලෙක |
| கல்வி கற்க | - | අධ්‍යාපනය ලැබීමට |
| சந்தித்து | - | මුණගැසිලා |
| பின்னால் | - | පිටුපසින් |
| மூதாட்டி | - | මැහැල්ල |
| கோபம் | - | කෝපය |
| விடயம் | - | කරුණ |
| தண்டித்தார் | - | දඬුවම් කළේය |
| தண்டிக்குமாறு | - | දඬුවම් කරන ලෙස |
| வயோதிபர் | - | වැඩි මහල්ලා |
| முதுமை | - | මහළු බව |

## செயற்பாடு 1
## ක්‍රියාකාරකම 1

கதையை மீண்டும் வாசித்து பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுங்கள்.
කතාව නැවත කියවා පහත සඳහන් ප්‍රශ්නවලට පිළිතුරු ලියන්න.

01. வாரணாசியை ஆண்ட அரசனின் பெயர் என்ன ?

02. இளவரசன் கல்வி கற்பதற்காக அரசன் அவரை யாரிடம் அனுப்பி வைத்தார் ?

03. நீராடப் போகும் பொழுது இளவரசன் வழியில் எதைக் கண்டார் ?

04. இளவரசன் செய்த தவறு என்ன ?

05. இளவரசன் ஆசானின் மீது எதற்காகப் பகைமை கொண்டார்?

## செயற்பாடு 2
## ක්‍රියාකාරකම 2

பின்வரும் படங்களுக்குரிய இலக்கங்களை அவற்றுக்குப் பொருத்தமான வாக்கியங்களுக்கு நேரே உள்ள கட்டங்களில் எழுதுங்கள்.
පහත සඳහන් පින්තූරවලට අවධානය යොමු කර ඒ පින්තූරයේ ඇති ඉලක්කම පහත සඳහන් වාක්‍යයට ගැළපෙන ආකාරයට කොටුව තුළ යොදන්න.

1



2



3



4



5



6



7



8



9



01. காலை உணவு உண்பேன்.

02. பல் துலக்குவேன்.

03. காலையில் எழுவேன்.

04. முகம் கழுவுவேன்.

05. ஆசிரியரை வணங்குவேன்.

06. காவி உடை அணிவேன்.

07. வகுப்பறைக்குப் போவேன்.

08. புத்தகப் பையை எடுப்பேன்.

09. புத்த பெருமானை வணங்குவேன்.

## செயற்பாடு 3
## ක්‍රියාකාරකම 3

பின்வரும் உதாரணத்தை அவதானித்து இடைவெளிகளை நிரப்புங்கள்.
පහත උදාහරණ අවධානයට ගෙන හිස්තැන් පුරවන්න.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அ. | அம்மா | + வ் | + உடன் | = | அம்மாவுடன் |
| | அம்மா | + வ் | + ஒடு | = | அம்மாவோடு |

01. அப்பா = ____________
அப்பா = ____________

02. விமலா = ____________
விமலா = ____________

| | | | | |
|---|---|---|---|---|
| ஆ. | ஆசிரியர் | + உடன் | = | ஆசிரியருடன் |
| | ஆசிரியர் | + ஒடு | = | ஆசிரியரோடு |

01. கமல் = ____________
கமல் = ____________

02. நாய் = ____________
நாய் = ____________

| | | | | | |
|---|---|---|---|---|---|
| இ. | குடம் | + த்த் | + உடன் | = | குடத்துடன் |
| | குடம் | + த்த் | + ஒடு | = | குடத்தோடு |

01. படம் = ____________
படம் = ____________

02. பாடம் = ____________
பாடம் = ____________

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஈ. | தம்பி | + ய் | + உடன் | = | தம்பியுடன் |
| | தம்பி | + ய் | + ஓடு | = | தம்பியோடு |

01. தங்கை = ____________________
தங்கை = ____________________

02. ஜலனி = ____________________
ஜலனி = ____________________



## செயற்பாடு 4
## ක්‍රියාකාරකම 4

உதாரணத்தை அவதானித்து இடைவெளிகளை நிரப்புங்கள்.

උදාහරණයට අවධානය යොමු කර හිස්තැන් පුරවන්න.

அக்கா, சாமா, அப்பா, அண்ணா, மாமா

01. நான் அக்காவோடு போகின்றேன்.
02. நான் ____________________ சமைக்கின்றேன்.
03. நான் ____________________ வருகின்றேன்.
04. நான் ____________________ குடிக்கின்றேன்.
05. நான் ____________________ பாடுகின்றேன்.

தம்பி, தங்கை, மாமி, அரசி, பாட்டி

06. நான் தம்பியோடு போகின்றேன்
07. நான் ____________________ சமைக்கின்றேன்
08. நான் ____________________ வருகின்றேன்
09. நான் ____________________ குடிக்கின்றேன்
10. நான் ____________________ பாடுகின்றேன்

## செயற்பாடு 5
## ක්‍රියාකාරකම 5

கட்டத்துக்குள் இருக்கும் எழுத்துக்களை கொண்டு சொற்களை ஆக்குங்கள்.
කොටුව තුළ ඇති අකුරු ගෙන වචන සාදන්න.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| ஞ, | ம, | ர, | ர், | கா, | ல, | ணா, | பு, |
| ல், | போ, | வா, | ரா, | ணா, | ஸ, | வ, | மு, |
| ன், | ளொ, | ரு, | பி, | ளா, | மூ, | டி, | யு, |
| ப், | ர, | ப, | யே, | கோ, | ல், | வி, | ட, |
| ய, | தை, | வா, | ம, | ள, | ணா, | ழி, | ரா, |
| ம, | ம், | பு | | | | | |

01. ______________________ 02. ______________________
03. ______________________ 04. ______________________
05. ______________________ 06. ______________________
07. ______________________ 08. ______________________
09. ______________________ 10. ______________________.

## செயற்பாடு 6
## ක්‍රියාකාරකම 6

ஆசிரியரின் உதவியுடன் பின்வரும் இலக்கங்களை அறிந்து இடைவெளிகளை நிரப்புங்கள்.
ගුරුවරයාගේ සහාය ඇතුව පහත සඳහන් සංඛ්‍යා හඳුනාගෙන හිස්තැන් පුරවන්න.

21. இருபத்தொன்று
22. இருபத்திரண்டு
23. இருபத்துமூன்று
24. இருபத்துநான்கு
25. இருபத்தைந்து
26. இருபத்தாறு
27. இருபத்தேழு
28. இருபத்தெட்டு
29. இருபத்தொன்பது
30. முப்பது

| | | | |
|---|---|---|---|
| 40. | நாற்பது | 50. | ஐம்பது |
| 60. | அறுபது | 70. | எழுபது |
| 80. | எண்பது | 90. | தொண்ணூறு |
| 100. | நூறு | | |

31. முப்பத்____________
32. முப்பத்____________
33. முப்பத்து____________
34. முப்பத்து____________
35. முப்பத்____________
36. முப்பத்____________
37. முப்பத்____________
38. முப்பத்____________
39. முப்பத்____________
40. நாற்பது

41. ________________
42. ________________
43. ________________
44. ________________
45. ________________
46. ________________
47. ________________
48. ________________
49. ________________
50. ஐம்பது

52. ________________
61. ________________
73. ________________
65. ________________
58. ________________
47. ________________

# 07 கடைப்பிடிப்போம்

01. பாதணிகளையும் தொப்பிகளையும் கழற்றிவிட்டு உட்செல்லுங்கள்.

02. ஒழுக்கத்தைப் பேணுங்கள்.

03. தொலைபேசி உபயோகத்தைத் தவிர்த்துக் கொள்ளுங்கள்.

04. சூழலைச் சுத்தமாகப் பேணுங்கள்.

05. வாகனங்களை உரிய தரிப்பிடங்களில் நிறுத்தி வையுங்கள்.

06. உங்களுக்குத் தேவையற்ற பொருட்களை என்னிடம் தாருங்கள்.

07. பொருத்தமான ஆடைகளுடன் வருகை தாருங்கள்.

08. உரிய இடங்களில் மட்டும் விளக்கேற்றுங்கள்.

09. உங்கள் பொருட்களைப் பாதுகாப்பாக வைத்துக்கொள்ளுங்கள்.

10. மரஞ்செடி கொடிகளை வளருங்கள்.

**சொல் அறிமுகம்**

වදන් පෙළ

| | | |
|---|---|---|
| பாதணிகளையும் | - | සපත්තුයි |
| ஒழுக்கம் | - | විනය |
| தரிப்பிடங்களில் | - | නැවතුමෙහි |
| ஆடைகளுடன் | - | ඇඳුමින් |
| விளக்கேற்றுங்கள் | - | පහන් දල්වන්න |

## செயற்பாடு 1
ක්‍රියාකාරකම 1

மேற்குறிப்பிட்ட அறிவுறுத்தல்களில் விரும்பிய ஐந்தை(5) உறுப்பமைய எழுதுங்கள்.

ඉහත සඳහන් උපදෙස් අතුරින් ඔබ කැමති උපදෙස් 5 ක් පිටපත්කර ලියන්න.

01. ______________________________
02. ______________________________
03. ______________________________
04. ______________________________
05. ______________________________

## செயற்பாடு 2
ක්‍රියාකාරකම 2

பின்வரும் சொற்களுக்கு ஒத்த கருத்துச் சொற்களை எழுதுங்கள்.

පහත සඳහන් පදවල සමානාර්ථ පද ලියන්න.

01. ஒழுக்கம் - ______________________
02. பயன்படுத்து - ______________________
03 உடைகள் - ______________________

04. தீபம் - ____________________

05. மரம் - ____________________

06. சுற்றாடல் - ____________________

## செயற்பாடு 3
## ක්‍රියාකාරකම 3

பின்வரும் சொற்களை ஒழுங்குபடுத்தி எழுதுங்கள்.
පහත සඳහන් වචන අර්ථාන්විත ලෙස සකස් කර ලියන්න.

01. வைத்திருங்கள் / சுத்தமாக / சூழலை

____________________

02. உரிய / பாதணிகளை / வையுங்கள் / இடத்தில்

____________________

03. உட்செல்லுங்கள் / பொருட்களை / வைத்துவிட்டு / இடத்தில் / உரிய

____________________

04. பேணுங்கள் / நன்றாக / ஒழுக்கத்தை

____________________

05. மட்டும் / உரிய / நிறுத்திவையுங்கள் / இடத்தில் / வாகனங்களை

____________________

## செயற்பாடு 4
## ක්‍රියාකාරකම 4

பின்வரும் சொற்களின் எதிர்க்கருத்துச் சொற்களை எழுதுங்கள்.
පහත සඳහන් පදවල විරුද්ධාර්ථ පද පාඩමෙන් තෝරා ලියන්න.

01. ஒழுக்கமற்ற - ____________________

02. அசுத்தம் - ____________________

03. பொருத்தமற்ற - ____________________

04. பாதுகாப்பற்ற - ____________________

05. அவநம்பிக்கை - ____________________

## செயற்பாடு 5
## ක්‍රියාකාරකම 5

பின்வருவனவற்றின் தமிழ்க் கருத்தினை எழுதுங்கள்.
**පහත සඳහන් උපදෙස්වල දෙමළ අර්ථය ලියන්න.**

01. කාලය රත්තරං වේ.

____________________

02. වැඩිහිටියන්ට ගරු කරමු.

____________________

03. අධික ආශාව විනාශයට මූලය.

____________________

04. පොදු දේපළ රැක ගනිමු.

____________________

05. සතුන්ට කරුණාව දක්වමු.

____________________

**செயற்பாடு 6**
**ක්‍රියාකාරකම 6**

பின்வரும் படத்தைப் பார்த்து 5 வாக்கியங்கள் எழுதுங்கள்.
පහත සඳහන් පින්තූරය ඇසුරෙන් වාක්‍ය 5 ක් ලියන්න.



1. ______________________________

2. ______________________________

3. ______________________________

4. ______________________________

5. ______________________________

# 08 பரமார்த்த குருவும் சீடர்களும்





ஓர் ஊரில் குடியானவன் ஒருவன் இருந்தான். அவனது பெயர் சியதோரிஸ். அவன் நல்ல மனிதன். என்றாலும், அவன் ஒரு பெரிய மூடன். சியதோரிஸ் ஓர் ஆடு வளர்த்தான்.



ஒரு நாள் இந்த ஆடு தண்ணீர் குடிக்க நினைத்தது. ஆடு தண்ணீர் குடிக்கப் பானையுள் தனது தலையைப் போட்டது. பானையின் வாய் சிறியது. ஆகையால் ஆட்டினது தலை அதில் இறுகிக் கொண்டது. தலையை வெளியே எடுக்க முடியாமல் ஆடு மிகவும் சிரமப்பட்டது.



சியதோரிஸ் இதைக் கண்டு மிகவும் துக்கப்பட்டான். ஆட்டின் தலையைப் பானையில் இருந்து வெளியே எடுக்க மிகவும் முயற்சி செய்தான். என்றாலும் அவனால் முடியவில்லை.



குடியானவன் பரமார்த்த குருவிடம் ஓடிப் போய் இதைப் பற்றிச் சொன்னான். பரமார்த்த குருவும் யானையின் மீது அவ்விடத்திற்கு வந்தார். அவருடன் சீடர்களும் வந்தார்கள்.



குரு ஆட்டை நன்றாகப் பார்த்தார். வெகு நேரம் யோசனை செய்தார். ஆட்டின் கழுத்தை வெட்டும்படி சொன்னார்.

சீடர்கள் ஆட்டின் கழுத்தை வெட்டினார்கள். ஆடு இறந்து விட்டது.

பின்பு பானையை நொறுக்கும்படி சொன்னார். சீடர்கள்பானையையும் நொறுக்கினர்கள்.

**சொல் அறிமுகம்**

වදන් පෙළ

| | | |
|---|---|---|
| குடியானவன் | - | ගමරාළ |
| மூடன் | - | මෝඩයා |
| ஆட்டினது | - | එළුවාගේ |
| வெளியே | - | පිටතට |
| முயற்சி | - | උත්සාහය |
| நன்றாக | - | හොඳින් |
| நொறுக்கினார் | - | පොඩිකළේය |
| சிறியது | - | කුඩාය |
| வளர் | - | ඇතිකරන්න |
| மனிதன் | - | මිනිසා |



**செயற்பாடு 1**

ක්‍රියාකාරකම 1

அடைப்புக்குறிக்குள் உள்ள சரியான சொல்லைத் தெரிந்து அதன் கிழ்க் கோடிடுங்கள்.

**වරහන් තුළ ඇති සුදුසු වචනය තෝරා යටින් ඉරක් අඳින්න.**

01. *சியதோரிஸ் ஒரு (கெட்ட, நல்ல) மனிதன்.*

02. *சியதோரிஸ் ஒரு (மாடு, ஆடு) வளர்த்தான்.*

03. *ஆட்டின் (கால், தலை) இறுகிக் கொண்டது.*

04. *பரமார்த்த குரு (யானை, குதிரை) மேல் வந்தார்.*

05. *சீடர்கள் ஆட்டின் (கழுத்தை, கால்) வெட்டினார்கள்.*

### செயற்பாடு 2
### ක්‍රියාකාරකම 2

பின்வரும் பந்தியின் உச்சரிப்பை சிங்கள மொழியில் எழுதுங்கள்.
පහත සඳහන් ඡේදයේ උච්චාරණය සිංහලෙන් ලියන්න.

ஒரு நாள் இந்த ஆடு தண்ணீர் குடிக்க நினைத்தது. ஆடு தண்ணீர் குடிக்க பானையுள் தனது தலையை போட்டது. பானையின் வாய் சிறியது. ஆகையால் ஆட்டினது தலை இறுகிக் கொண்டது. தலையை வெளியே எடுக்க முடியாமல் ஆடு மிகவும் சிரமப்பட்டது.

________________________________________

________________________________________

________________________________________

________________________________________

________________________________________

### செயற்பாடு 3
### ක්‍රියාකාරකම 3

பின்வரும் வாக்கியங்களின் சிங்களக் கருத்தை எழுதுங்கள்.
පහත සඳහන් වාක්‍යවල සිංහල අර්ථය ලියන්න.

01. ஆடு இறந்து விட்டது.

________________________________

02. பின்பு பானையை நொறுக்கும்படி சொன்னார்.

________________________________________

03. பரமார்த்த குரு ஆட்டின் கழுத்தை வெட்டும்படி சொன்னார்.

________________________________________

04. குடியானவன் இதைக் கண்டு மிகவும் துக்கப்பட்டான்.

________________________________________

05. என்றாலும் அவனால் முடியவில்லை.

________________________________________

## செயற்பாடு 4
## ක්‍රියාකාරකම 4

பின்வரும் சொற்களைக் கொண்டு வாக்கியங்கள் அமைக்குக.
**පහත සඳහන් වචන උපයෝගී කරගෙන වාක්‍ය සකසන්න.**

01. ஆடு - ______________________________

02. மனிதன் - ______________________________

03. சிறியது - ______________________________

04. நன்றாக - ______________________________

05. வெளியே - ______________________________

06. மூடன் - ______________________________

07. தண்ணீர் - ______________________________

08. பெயர் - ______________________________

09. நல்ல - ______________________________

10. அங்கும் இங்கும் - ______________________________

## செயற்பாடு 5
## ක්‍රියාකාරකම 5

பாடத்தை வாசித்து பின்வரும் பந்தியைப் பூரணப்படுத்துங்கள்.
පාඩම කියවා පහත ඡේදය සම්පූර්ණ කරන්න.

சியதோரிஸ் ________ கண்டு மிகத் துக்கப்பட்டான். ________ தலையைப் பானையில் இருந்து வெளியே ________ முயற்சி ________ என்றாலும் அவனால் முடியவில்லை. குடியானவன் பரமார்த்த ________ ஓடிப் போய் இதைப் ________ சொன்னான். பரமார்த்த குரு ________ மேல் வந்தார். சீடர்களும் அவருடன் ________ வந்தார்கள்.

## செயற்பாடு 6
## ක්‍රියාකාරකම 6

பின்வரும் தலைப்புகளில் ஒன்றைத் தெரிவு செய்து 50 சொற்களுக்குள் ஒரு கட்டுரை எழுதுங்கள்.
පහත සඳහන් මාතෘකා යටතේ වචන 50 ක රචනාවක් ලියන්න.

01. எனது தாத்தா

02. எனது ஊர்

03. நான்

04. எனது செல்லப் பிராணி

05. எமது பூந்தோட்டம்

# 09 உதவி செய்வோம்

| | |
|---|---|
| சுமேத பிக்கு | :- வணக்கம் நாலக தேரரே. |
| நாலக பிக்கு | :- வணக்கம் சுமேத தேரரே. |
| சுமேத பிக்கு | :- கேமானந்த தேரர் ஏன் நேற்று வர இல்ல? |
| கேமானந்த பிக்கு | :- எனக்கு சுகம் இல்ல சுமேத தேரர். |
| நாலக பிக்கு | :- இப்ப உங்களுக்கு சுகமா? |
| கேமானந்த பிக்கு | :- இன்னும் இல்லை. |
| சுமேத பிக்கு | :- என்ன வருத்தம்? |
| கேமானந்த பிக்கு | :- இருமலும் தடிமனும். |
| நாலக பிக்கு | :- மருந்து எடுத்திங்களா? |
| கேமானந்த பிக்கு | :- எடுத்தன் |
| சுமேத பிக்கு | :- கொஞ்சம் ஓய்வு எடுங்க. |
| கேமானந்த பிக்கு | :- சுமேத தேரர் எனக்கு மயக்கமாக இருக்கு. |
| சுமேத பிக்கு | :- விபுலானந்த இங்க சீக்கிரம் வாங்க. |
| விபுலானந்த பிக்கு | :- என்ன நாலக்க தேரர்? என்ன சுமேத தேரர்? கேமானந்தவுக்கு என்ன நடந்தது? |
| நாலக பிக்கு | :- அவருக்கு மயக்கமாக இருக்கு. நாங்கள் அவரை முதலுதவி அறைக்குக் கூட்டிச் போவம். |
| விபுலானந்த பிக்கு | :- ஓ... நாலக தேரர் சுமேத தேரரை மெதுவாக பிடித்து தூக்குங்க. |

**சொல் அறிமுகம்**
වදන් පෙළ

| | | |
|---|---|---|
| மருந்து | - | බෙහෙත් |
| சுகம் இல்ல | - | සනීප නැහැ |
| கொஞ்சம் | - | ටිකක් |
| இன்னும் | - | තවම |
| இருமல் | - | කැස්ස |
| தடிமன் | - | සෙම්ප්‍රතිශ්‍යාව |
| மயக்கம் | - | ක්ලාන්තය |
| முதலுதவி அறை | - | ප්‍රථමාධාර කාමරය |
| வருத்தம் | - | අමාරුව |
| தூக்குங்க | - | ඔසවන්න |

**செயற்பாடு 1**
ක්‍රියාකාරකම 1

பின்வரும் படத்தைப் பார்த்து பொருத்தமான விடையைத் தெரிவு செய்து அதன் கீழ் கோடிடுங்கள்.
පහත සඳහන් පින්තූරය බලා ගැළපෙන පිළිතුර තෝරා ඒ යටින් ඉරක් අඳින්න.



01. இது என்ன காட்சி?

1) இது ஒரு வீட்டின் காட்சி

2) இது ஒரு சந்தைக் காட்சி

3) இது ஒரு பிரிவேனா காட்சி

02. இந்தப் படத்தில் எத்தனை பேர் இருக்கின்றார்கள்?

1) இரண்டு பேர்

2) ஐந்து பேர்

3) நான்கு பேர்

03. மாணவர்கள் என்ன செய்கின்றார்கள்?

1) கதைத்துக் கொண்டிருக்கின்றார்கள்.

2) விளையாடிக் கொண்டிருக்கின்றார்கள்.

3) பூக்களைப் பறித்துக் கொண்டிருக்கின்றார்கள்.

04. அவர்கள் என்ன அணிந்து இருக்கின்றார்கள்?

1) சட்டை

2) காவி உடை

3) பனியன்

05. சூழலில் என்ன காணப்படுகின்றது?

1) பூச்செடிகள்

2) குப்பைகள்

3) மரங்கள்



**செயற்பாடு 2**
ක්‍රියාකාරකම 2

பாடத்தை வாசித்து பின்வரும் வாக்கியங்களைச் சரியாயின் சரி (✓) எனவும் பிழையாயின் பிழை (×) எனவும் அடையாளம் இடுக.
**පාඩම කියවා පහත සඳහන් වාක්‍යය හරි නම් හරි (✓) ලකුණද, වැරදි නම් වැරදි (×) ලකුණ ද, වරහන් තුළ යොදන්න.**

01. கேமானந்த தேரர் நேற்று பாடசாலைக்கு வரவில்லை ( )
02. கேமானந்த தேரருக்குப் பல் வலி ( )
03. சுமேத தேரர் அழைக்கும் பொழுது விபுலானந்த தேரர் வரவில்லை. ( )
04. கேமானந்த தேரர் மருந்து எடுத்தார். ( )
05. கேமானந்த தேரருக்கு நாலகவுடனும் சுமேதவுடனும் கதைக்கும் பொழுது மயக்கம் வந்தது. ( )



**செயற்பாடு 3**
ක්‍රියාකාරකම 3

பின்வரும் பேச்சு வழக்கிற்குப் பொருத்தமான எழுத்து வழக்குச் சொல்லைத் தெரிவு செய்து இணையுங்கள்.
**පහත සඳහන් භාෂණ වචනයට අනුරූප ලේඛන වචනය සොයා යා කරන්න.**

| | பேச்சு வழக்கு | எழுத்து வழக்கு |
|---|---|---|
| 01. | இப்ப | தூக்குங்கள் |
| 02. | இருக்கு | எடுத்தீர்களா? |
| 03. | தூக்குங்க | வேண்டும் |
| 04. | வேணும் | இப்பொழுது |
| 05. | எடுத்திங்களா? | இருக்கின்றது |

## செயற்பாடு 4
## ක්‍රියාකාරකම 4

பொருத்தமான சிங்களச் சொல்லை தெரிவு செய்து இணையுங்கள்.
ගැළපෙන සිංහල වචනය තෝරා යා කරන්න.

| | | |
|---|---|---|
| 01. | தலைவலி | ඇසේ අමාරුව |
| 02. | வயிற்றுவலி | සෙම්ප්‍රතිශ්‍යාව |
| 03. | இருமல் | හිසරදය |
| 04. | காய்ச்சல் | කනේ අමාරුව |
| 05. | பல்வலி | බඩේ අමාරුව |
| 06. | தடிமன் | කැස්ස |
| 07. | வாந்தி | උණ |
| 08. | மயக்கம் | දත් කැක්කුම |
| 09. | கண்வலி | වමනය |
| 10. | காதுவலி | ක්ලාන්තය |

## செயற்பாடு 5
## ක්‍රියාකාරකම 5

கட்டத்துள் இருகும் சொல்லை தெரிவு செய்து இடைவெளி நிரப்புங்கள்.
කොටුව තුළ ඇති වචනය තෝරා හිස්තැන් පුරවන්න.

> மயக்கமாக, சீக்கிரமாக, மெதுவாக, அவசரமாக, கொஞ்சம்,

01. அவர் ________________ இருந்தார்.
02. நான் ________________ போனேன்.
03. நாம் ________________ சாப்பிட்டோம்.

04. நாங்கள் ______________ ஓடினோம்.

05. நான் ______________ வரவில்லை.



**செயற்பாடு 6**
**ක්‍රියාකාරකම 6**

பின்வரும் எழுவாய்க்குப் பொருத்தமான பயனிலையைத் தெரிவு செய்து இணையுங்கள்.

**පහත සඳහන් උක්තයට ගැළපෙන ආඛ්‍යාතය සොයා යා කරන්න.**

| | |
|---|---|
| 01. நான் | நடந்தீர்கள். |
| 02. நாம் | நடந்தேன். |
| 03. நாங்கள் | நடந்தாய். |
| 04. நீ | நடந்தோம். |
| 05. நீங்கள் | நடந்தோம். |




# ஒன்றுபடுவோம்

நந்ததேவன் நந்தகுமார்,
இல-15, கோவில் வீதி,
மங்கலபுரம்,
திருகோணமலை.
2017.03.07.

அன்புள்ள சுஜீவ,

உங்களது கடிதம் கிடைத்தது. மிக்க மகிழ்ச்சி. உங்கள் அழைப்பை ஏற்றுக்கொள்கின்றேன். நான் நேற்றைய தினம் சுற்றாடல் பாதுகாப்பு தொடர்பான ஒன்றுகூடலில் கலந்துகொண்டேன். அந்நிகழ்வு காலை 8.30 க்கு ஆரம்பமானது. இதில் நூற்றுப்பத்து பேர் பயனாளிகளாகக் கலந்துகொண்டனர். முதலாவது உரையை நிகழ்த்திய பொதுச் சுகாதார அலுவலர், சுற்றுப்புறச் சூழலை சுத்தமாக வைத்திருத்தல் தொடர்பான, காணொளிகளைப் பயன்படுத்தி தகவல்களையும் விளக்கங்களையும் வழங்கினார்.

வீட்டுச் சூழலில் காணப்படும் சிரட்டைகள், டயர்கள், பேணிகள், மூடிகள், போத்தல்கள், பொலித்தீன் உறைகள் மற்றும் ஏனைய நீர் தங்கக் கூடிய கழிவுப்பொருட்களைப் புதைத்து விடுமாறு அவர் அறிவுரைகளை வழங்கினார். கழிவுப்பொருள் பராமரிப்பை ஒழுங்காக மேற்கொள்வதால் சூழலின் அழகு, சுத்தம், பாதுகாப்பு என்பவற்றைப் பேண முடியும் என்றும் இவ்வாறு செயற்படுவதால் உடல் ஆரோக்கியம், உளத் திருப்தி ஏற்படும் என்றும் உதாரணங்களுடன் எடுத்துக் கூறினார். அத்துடன், நுளம்பு பெருகுதல், பரவுதல் தொடர்பாகவும் எடுத்துக்காட்டு களுடன் கூறியமை விழிப்புணர்வை ஏற்படுத்தியது.

நான் உங்களை நேரில் சந்திக்கும் போது இது தொடர்பான ஏனைய விபரங்களைக் கூறுகிறேன். இப்படியான ஒன்றுகூடல்களில் பங்குபற்றும் வாய்ப்பு

கிடைத்தால் நீங்களும் பங்குபற்றுங்கள். அது உங்களுக்கு பயனுள்ளதாக அமையும் என நினைக்கிறேன். இவ்விடயங்களை மக்களிடையே கூறுவதால் அவர்களிடம் இது தொடர்பான விழிப்புணர்வு ஏற்படும். எனவே நாங்கள் மகிழ்ச்சி நிறைந்த ஒரு பசுமையான சூழலை உருவாக்க ஒன்றுபடுவோம்.

இப்படிக்கு
தங்கள் நண்பன்
என். நந்தகுமார்.

**சொல் அறிமுகம்**
වචන් පෙළ

| | | |
|---|---|---|
| அழைப்பை | - | ආරාධනාව |
| சுற்றாடல் பாதுகாப்பு | - | පරිසරය සුරැකීම |
| ஒன்று கூடல் | - | හමුවේද |
| பயனாளிகளாக | - | ප්‍රතිලාභීන් ලෙස |
| காணொளி | - | වීඩියෝ පට |
| தகவல்களையும் | - | තොරතුරුත් |
| மேற்கொள்வதால் | - | ක්‍රියාත්මක කිරීමෙන් |
| உடல் ஆரோக்கியம் | - | ශාරීරික සුවය |
| உளத்திருப்தி | - | මානසික තෘප්තිය |
| விழிப்புணர்வு | - | දැනුවත් කිරීම |
| ஏனையோருக்கும் | - | අන් අයට ද |
| உழைப்போம் | - | කැපවෙමු |

## செயற்பாடு 1
## ක්‍රියාකාරකම 1

பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுங்கள்.
පහත සඳහන් ප්‍රශ්නවලට පිළිතුරු ලියන්න.

01. ஒன்று கூடலில் கலந்துகொண்டவர் யார்?

02. ஒன்று கூடல் எது தொடர்பாக நாடத்தப்பட்டது?

03. ஒன்று கூடல் நடைபெற்ற திகதியைக் குறிப்பிடுக.

04. அங்கு கூறப்பட்ட முக்கிய விடயங்களை எழுதுக.

05. இங்கு பயன்படுத்தப்பட்ட தொழில்நுட்ப சாதனம் எது?

## செயற்பாடு 2
## ක්‍රියාකාරකම 2

பொருத்தமான எழுத்தை இட்டு இடைவெளியை நிரப்புங்கள்.
පාඩම ඇසුරෙන් සුදුසු අකුර යොදා සම්පූර්ණ කරන්න.

01. மங்க _______ புரம்

02. அன்புள் _______

03. மகி _______ ச்சி

04. அ _______ ப்பை

05. நிக _______ வு

06. கா _______ ளி.

07. வி _______ ப்புணர்வு.

08. உ _______ ப்போம்.

### செயற்பாடு 3
### ක්‍රියාකාරකම 3

பாடத்தில் உள்ள பன்மைச் சொற்களை இனங்கண்டு எழுதுங்கள்.
පාඩමේ ඇතුළත් බහුවචන පද හඳුනාගෙන ලියන්න.

### செயற்பாடு 4
### ක්‍රියාකාරකම 4

இந்தப் பாட விடயம் தொடர்பாக பதாதை ஒன்றைத் தயாரியுங்கள்.
පාඩමේ ඇතුළත් කරුණු උපයෝගී කරගෙන බැනරයක් නිර්මාණය කරන්න.

### செயற்பாடு 5
### ක්‍රියාකාරකම 5

இக்கடிதத்திற்கு சுஜீவ எழுதும் பதில் கடிதம் ஒன்றை எழுதுங்கள்.
මෙම ලිපියට සුජීව ලියනු ඇතැයි බලාපොරොත්තු වන පිළිතුරු ලිපිය ලියන්න.



## செயற்பாடு 6
## ක්‍රියාකාරකම 6

நீங்கள் விரும்பிய அறிவுரைகள் ஐந்தை (5) எழுதுங்கள்.
ඔබ කැමති උපදෙස් පහක් (5) ලියන්න.

01. ______________________________

02. ______________________________

03. ______________________________

04. ______________________________

05. ______________________________